


# குறள் வழி

திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்

திருவள்ளுவராண்டு 2055 ஆகஸ்ட் (ஆவணி)-2024 மலர்: 2 இதழ்: 8



# உலக அளவில் திருக்குறளுக்கென ஒரு சிறப்புப் பதிப்பகம்
# வலைத்தமிழ் பதிப்பகம்

இனி திருக்குறள் நூல்களை ஒரே இடத்தில் உங்களுக்குப் பிடித்தவகையில், பிடித்த உரையை (நாட்டுடைமையாக்கப்பட்டவை) அச்சடித்துப் பெறலாம். நிகழ்ச்சிகளில் பரிசாக வழங்க இவற்றைப் பயன்படுத்தலாம். உலக நாடுகளில் மொழிபெயர்க்கப்பட்ட திருக்குறள் நூல்கள் கிடைப்பதில்லை என்பதை சரிசெய்ய, இந்தியா அமெரிக்காவில் அந்தந்த நாடுகளில் நூல்கள் வெளியிட்டுள்ள பதிப்பகங்களைத் தொடர்புகொண்டு சென்னையிலிருந்து வெளியிட முயற்சி நடக்கிறது. இனி மொழிபெயர்ப்பு நூல்களைத் தேடி ஒவ்வொரு இடமாக அலையவேண்டியதில்லை.

இதற்காக தனித்த கவனம் செலுத்த திருக்குறள் ஆர்வம் கொண்ட குழு அமைக்கப்பட்டுள்ளது.

இந்தியா, அமெரிக்காவிலிருந்து பிற நாடுகளுக்கு அனுப்பவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## இதுவரை சேர்க்கப்பட்ட நூலகள்:

1. திருக்குறள் Thirukkural: The Holy Scripture, தங்கப்பதிப்பு, சிகாகோ
2. Thirukkural Translations in World Languages
3. நாமக்கல் கவிஞரின் திருக்குறள் எளிய உரை
4. திருக்குறளார் வழங்கும் திருக்குறள் தெளிவுரை
5. Thirukkural Book Custom Printing (You choose any size, any design, any author)
6. திருக்குறள் சமஸ்கிருத மொழிபெயர்ப்பு – இந்திரஜித்

## பிற நூல்கள்:

1. வலைத்தமிழ் பங்களிப்பில் தமிழியக்கம் வெளியிட்ட "சூட்டி மகிழ்வோம் தூய தமிழ்ப்பெயர்கள்" நூல்.

வீடுதோறும் திருக்குறள் நூல் திட்டத்தை முழுமையாக நடைமுறைப்படுத்த திருக்குறளை பரிசுப்பொருளாக பிறந்தநாள் விழா, திருமணம் உள்ளிட்டவற்றில் பயன்படுத்துவோம்.

இணையத்தில் பெற: https://estore.valaitamil.com

# “குறள் வழி” மாத இதழ்

**(தனிச்சுற்றுக்கு மட்டும்)**

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் செய்திகளை, செயல்பாடுகளை, நிகழ்ச்சிகளை, திருக்குறள் சார்ந்த உலக முன்னெடுப்புகளை, பரப்புரைகளை தாங்கி மாதம் ஒருமுறை வரும் இதழ்.

## ஆசிரியர் குழு



வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி



முனைவர். திருமலை ராஜா



அஜய்குமார் செல்வன், சென்னை



வி.ஹேமா, திருச்சி

## ஆலோசனைக் குழு



சி.இராஜேந்திரன், IRS (ஓய்வு)



இரவி சொக்கலிங்கம்

## ஆகஸ்ட் 2024 மாத, "குறள் வழி" முதல் மாத இதழ் உங்கள் வாசிப்பிற்கு

**To Read as a book:** https://www.valaitamil.com/KuralVazhi/ebook.html

**Magazine Page:** https://www.valaitamil.com/literature_thirukkural_kural-vazhi/

**To download as PDF:**

https://drive.google.com/file/d/1y2_zXAwFJglbxaDuwCwioN1dJz_UadMO/view?usp=sharing

**உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுத, படைப்புகளை அனுப்ப** : kural.mutrothal@gmail.com

Facebook Page to LIKE and SHARE: https://www.facebook.com/groups/245630171535251

உங்கள் மாவட்டத்தில், உங்கள் அமைப்பில் நடைபெறும் திருக்குறள் சார்ந்த நிகழ்வுகளை எங்களுக்கு அனுப்பவும். மேலும், இவ்விதழ் குறித்த உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதி அடுத்த இதழில் வாசகர் பகுதியில் இடம்பெறச் செய்யவும்.

# உள்ளே...

# ஆசிரியர் பக்கம்

திருக்குறள் ஆர்வலர்களுக்கு வணக்கம்,

திருக்குறளுக்கு ஒரு தனி இதழ் நடத்துவது அவசியமா? அப்படி அதை வைத்து மட்டுமே பிற இலக்கியங்களைத் தொடாமல் திருக்குறளை மையப்படுத்தி ஒரு இதழை நடத்திவிடமுடியுமா? திருக்குறளுக்கு ஒரு இதழ் நடத்தும் அளவுக்கு வாசகர்களும், தகவல்களும் உள்ளதா? திருக்குறளை மையமாக வைத்து தொடர்ந்து நடத்தி வாசகர்களுக்குத் தொய்வு ஏற்படாமல் இதழைக் கொண்டுசெல்லமுடியுமா? பல்வேறு கேள்விகளை 11 மாதங்களுக்கு முன்பு நாம் நமக்குள் எழுப்பி சுய பரிசோதனை செய்தோம்.

திருக்குறள் ஒரு வாழ்வியல் நூல். அது தொடாத துறைகள் இல்லை. அதைவிட முழுமையாக வாழ்வின் அனைத்து துறைகளையும் பேசும் நூல்கள் இல்லை. எனவே திருக்குறளை வைத்து மட்டுமே தமிழ்ச்சமூகத்தை அடுத்தக்கட்டத்திற்கு நகர்த்தமுடியும் என்ற நம்பிக்கையைப் பெற்றோம். ஒருபுறம் உலகப் பரவலாக்கல் ஆய்வுகளுக்காக உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புத் திட்டம், மறுபுறம் களத்தில் மக்களின், மாணவர்களின் வாழ்வியலில் திருக்குறள் ஏன் முழுமையாக உள்வாங்கப்படவில்லை என்பதை ஆராய்ந்து பயிற்சியளிக்கும் "உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்", மேலும் வலைத்தமிழ் – வள்ளுவர் குரல் குடும்பம் இணைந்து நடத்தும் "எனைத்தானும் நல்லவை கேட்க", "நவில்தொறும் நூல்நயம்" ஆவணப்படுத்துதல்கள், வலைத்தமிழில் வெளியிடப்பட்டுள்ள 10க்கும் மேற்பட்ட உரைகளும், ஆண்டுக்கு இணையவழியில் 28 லட்சம் வாசகர்களின் வாசிப்பு அனுபவம், தேசிய நூலாக கொண்டுசெல்ல தனி குழு, Thirukkural for UNESCO குழு, உலக அலுவல் மொழிகளில் மொழிப்பயிர்க்கப்படவேண்டிய மீதம் உள்ள 158 மொழிபெயர்ப்புகளை செய்து முடித்தல், திருக்குறள் 2030 திட்டம் (Thirukkural 2030), மொழிபெயர்ப்புத் வழிகாட்டுதல் குழு, உலக நாடுகளில் பயிற்சி வழங்கும் குழு, நூல்களை ஆவணப்படுத்தல் என்று சுமார் 25க்கும் மேற்பட்ட பல்முனைத் திருக்குறள் திட்டங்களை முன்னெடுத்துள்ளோம்.

இந்த நம்பிக்கையில்தான் இவ்விதழை பெரிய திட்டமிடுதல் இல்லாமல் 11 மாதங்களுக்கு முன்பு தொடங்கினோம். இது அடுத்தகட்ட வளர்ச்சிக்கு செல்லவேண்டிய நிலையில் உள்ளது. தமிழில் வழக்கமாக எது நல்லது வந்தாலும், நடப்பு காலத்தில் பார்த்து கடந்துசென்றுவிட்டு, காலம் கடந்தபிறகு அதன் அருமை பெருமைகளை பேசி செலவு செய்து விழா எடுத்து பாராட்டுவோம். அது எந்த வகையிலும் வளர்ச்சிக்குப் பயன்படாது. இன்றைய காலக்கட்டத்தில் இப்படி ஒரு இதழ் உலகத்தமிழர்களிடம் நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டு பயன்பாட்டில் இல்லை. இதை ஆதரிக்கவேண்டியது ஒவ்வொருவரின் கடமை. திருக்குறள் வாழ்வியல் கருத்துகளை, பல அறிஞர்களின் சிந்தனைகளை, புதிய வாழ்வியல் கோணங்களை ஆராய்ந்து வெளிவரும் கட்டுரைகள் இடம்பெற ஒருசிலர் முழுநேரமாக இதில் பணியாற்றவேண்டும். அதற்குரிய பொருளாதார வாய்ப்புகள் ஆராயப்படுகிறது.

வாய்ப்புள்ளவர்கள் தங்கள் நிறுவனத்தின் விளம்பரங்களைக் கொடுக்க கேட்டுக்கொள்ளப்படுகிறது.

தொடர்ந்து பயணிப்போம்.

தொடர்ந்து உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதுங்கள்.

திட்ட ஒருங்கிணைப்பாளர்,
**வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி,**
**குறள் வழி மாத இதழ் (www.KuralWorld.org)**




## உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - என்ன செய்கிறது?

உலகப் பொதுமுறையாம் திருக்குறளை இளம் வயதிலேயே மாணவ மாணவியர் மனப்பாடம் செய்தால் வாழ்நாள் முழுவதும் மனத்தில் நிற்கும். "இளமையில் கல்வி பசுமரத்தாணி" என்பது பழமொழி.

திருக்குறள் மனித இனத்தின், குறிப்பாக தமிழர்களின் மாபெரும் பொதுவுடைமைச் சொத்து. திருக்குறள் நெறிகள் பரவப்பரவ, அறம் பரவும். தமிழ் மொழிப்பயிற்சியும், மாணவர்களுக்குக் கிடைக்கும். அறமும், மொழியும் வளரும். மேலும் அறமும், திறனும், ஒருங்கே வாய்ந்த இளைஞர் சமுதாயம் உருவாகிட வலுவான அடித்தளமாக திருக்குறள் மனனம் அமையும். சமுதாயத்தில் நல்லிணக்கமும், மனித நேயமும் வளரும்.

திருக்குறள் பொருள் பொதிந்த, பொருள் நிறைந்த, இகலில்லா இன்ப வாழ்க்கையின் கையேடு.
கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கும் மேலாக, 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் மாணவ மாணவியரை ஊக்குவிக்கும் வகையில் தமிழக அரசு சான்றிதழ் மற்றும் பரிசுத் தொகை வழங்கி வருகிறது. திருக்குறள் முற்றோதல் செய்யும் 70 மாணவர்களுக்கு, 2021 ஆம் வருடம் வரை, தலா ரூ.10000/- திருவள்ளுவர் தினத்தன்று அரசு வழங்கி வந்தது.

இந்த சூழ்நிலையில் தமிழக அரசு 2022 ஆம் ஆண்டு சட்டசபையில் 70 மாணவர்கள் என்ற உச்சவரம்பை நீக்கியது.பரிசுத்தொகையும் உயர்த்தப்படும் என்று மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் சட்டசபையில் அறிவித்தார். {தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை. தமிழ் வளர்ச்சி மானியக் கோரிக்கை - 46 அறிவிப்புகள் (2021-2022)}. கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாக இதுவரை ஆண்டுதோறும் பரிசு பெறும் மாணவர்களின் வயதைப் பார்த்தால் 95 விழுக்காடு மாணவ/மாணவியர் 14 வயதுக்குட்பட்டே இருக்கிறார்கள். ஆறு/ஏழாம் வகுப்புக்குள் மனனம் செய்துவிட்டால், பிறகு மேல் வகுப்புகளில் பொருளுணர்ந்து படிக்க ஏதுவாக இருக்கும். தனிவாழ்வில் நிறைவான வாழ்க்கை வாழவும், சமுதாய பிரச்சனைகளை திருக்குறள் துணையுடன் எதிர் கொள்ளவும், இளவயதிலேயே 1330 அருங்குறள் மனனம் பயனுள்ளதாக இருக்கும்.

இந்தப் பின்புலத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் டு சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து, தமிழ்நாடு, புதுச்சேரியில் ஏற்கனவே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்கும் ஆசிரியர்களை ஒருங்கிணைத்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு ஒருங்கிணைப்பாளர், ஒரு பயிற்சியாளர், ஒரு புரவலர் அடையாளம் கண்டு அக்டோபர் 2021ல் தொடங்கப்பட்டது இவ்வியக்கம். எம்முடன் உலகத் தமிழ்வளர்ச்சி மன்றம், USA இணைந்து ஒரு மாவட்டத்திற்கு 1000 திருக்குறள் நூல்கள் வீதம் ஒரு ஆண்டுக்கு 40,000 திருக்குறள் நூல்களையும், பத்து ஆண்டுகளுக்கு மொத்தம் 4 லட்சம் நூல்களையும் அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்தது. முதல் ஆண்டு வெற்றிகரமாக நூல்களை வழங்கி இரண்டாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறோம்.

### உங்கள் மாவட்ட திருக்குறள் பரப்புரை தேவைகளுக்கு பொறுப்பேற்க திருக்குறள் புரவலர்களை அழைக்கிறோம்.

*உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் அந்த மாவட்டத்தை சார்ந்த திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர் ஒருவரை அடையாளம் கண்டு அல்லது உருவாக்கி பகுதிநேர-முழுநேர திருக்குறள் பயிற்சி வழங்க ஊக்கத்தொகை, மாணவர்களுக்கு சான்றிதழ் அச்சடித்தல், "குறள் வழி" இதழுக்கு விளம்பரம் கொடுத்து இலவச இதழ்களை அனுப்ப உதவுதல் என்று சுயமாக உங்கள் மாவட்டத்தில் பொறுப்பேற்க அழைக்கிறோம். ஊர் கூடி பயணிக்கும் திருக்குறள் தேரை இழுக்க வடம் பிடிக்க வாருங்கள். எமக்கு அறம் சார்ந்த வணிகர்கள் அவர்கள் தொழில்களை விளம்பரம் செய்து உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் பரப்புரைக்கு உதவலாம்.*




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்

1) தமிழ்நாடு அரசின் புதிய அறிவிப்பைத் (மாணவர் எண்ணிக்கை உச்ச வரம்பு ஏதுமில்லை, பரிசுத் தொகை உயர்வு) தொடர்ந்து, 1330 திருக்குறள் பாக்களையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அரசு விருதும், பரிசுத்தொகையும் பெற வைப்பது.

2)பள்ளித் தலைமை ஆசிரியர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் மனனப் பயிற்சியை 3–ஆம் வகுப்பிலிருந்து 8–ஆம் வகுப்புக்குள் அளித்தல். அவர்களுக்கு அரசு விருது மட்டுமின்றி உலகத் திருக்குறள் இயக்கத்தின் சார்பாகத் "திருக்குறள் முற்றோதல்–இளநிலை" சான்றிதழ் வழங்குதல்.

3) முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமையாகக் குறளின் பொருளை அறிந்துகொள்ள வழிசெய்தல். அதில் நேர்முகத் தேர்வு வைத்து பொருள் உணர்ந்து கற்றவர்களுக்குத் "திருக்குறள் முற்றோதல் – முதுநிலை" சான்றிதழ் வழங்குதல்.

4) திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க, தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் தகுதியும், அனுபவமும், ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியாளராக்கவும், அந்தப் பயிற்சியாளருக்கு மாதந்தோறும் ஊக்கத்தொகை வழங்க ஒரு புரவலரையும், மாவட்ட ஒருங்கிணைப்புப் பணிக்காக ஓர் ஒருங்கிணைப்பாளரையும் நியமித்தல்.

5) ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில் அந்தந்த மாவட்டங்களில் திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் அனைவரும் மாவட்டத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட திருவள்ளுவர் சிலையின் முன்பு ஒன்றுகூடி, தமிழ் வளர்ச்சித்துறை, மாவட்ட நிர்வாகம், பள்ளி, கல்லூரிகள், பொதுமக்கள் இணைந்து குழுவாக "திருக்குறள் முற்றோதல்" செய்து, கற்றதை மறந்துவிடாமல் இருக்க வழிசெய்தல்.

6) குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு (https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php), வரிசை எண் கொடுத்து, அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியைப் பெற துணை நிற்றல்.

7) குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று உரிய கல்வி பெற்று மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், வேலைவாய்ப்பில், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களுக்கு உரிய உதவிகளைப் பெறவும் துணைநிற்றல்.

8) திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களுக்கு அரசு வேலைவாய்ப்பில் 5% முன்னுரிமை வழங்க கோரிக்கை வைத்து அதனை அடைய முயற்சி மேற்கொள்ளப்படும். தமிழ் அமைப்புகள் வழியே மாணவத் தூதர்களாக வெளிநாடு வாய்ப்புகளை ஏற்படுத்த முயற்சி மேற்கொள்ளப்படும்.

9) அனைத்து பள்ளிகளிலும் காலையில் திருக்குறள் மறையோதி தொடங்க அரசுக்கு பரிந்துரைத்து, அனைத்துத் தமிழ் நிகழ்வுகளிலும் திருக்குறள் மறையோதி நிகழ்ச்சியைத் தொடங்குவதை நடைமுறையில் கொண்டுவர முயற்சி செய்யப்படும்.

10) இதுவரை வெளிவந்துள்ள திருக்குறள் மொழிபெயர்ப்புகள், உரைநூல்கள் மட்டுமல்லாது, திருக்குறள் சார்ந்த அனைத்து விதமான நூல்களையும் தொகுத்து உலகத் திருக்குறள் ஆராய்ச்சி மையம் ஒன்றை மயிலாடுதுறையில் உருவாக்கி அதில் திருக்குறள் கண்காட்சி, நூலகம், மின் நூலகம், அரங்கங்கள் என்று அமைத்து அதை தமிழ்க் கட்டிடக்கலை கலைநயத்துடன் அமைக்க முயற்சிக்கப்படும்.

www.KuralWorld.org | Kural.Mutrothal@gmail.com

குறள் வழி
திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்

# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)

## மாவட்டப் பயிற்சியாளர்கள்

| மாவட்டம் | பெயர் | தொலைபேசி |
| --- | --- | --- |
| செங்கல்பட்டு | திருமதி. பி. கற்பகவள்ளி | +91 99525 73398 |
| அரியலூர், புதுச்சேரி | திருமதி. சங்கீதா கண்ணன் | +91 78718 39331 |
| திண்டுக்கல் | திரு. வெ.செல்வன் | +91 97884 25501 |
| தஞ்சை | திருமதி. ச. ஆனந்தி | +91 96008 90134 |
| காஞ்சிபுரம் | திரு. குறள் அமிழ்தன் | +91 93643 23915 |
| காரைக்குடி | திரு. மெ.செயம்கொண்டான் | +91 9865 455036 |
| நாமக்கல் | முனைவர். எ.திருமலை ராஜா | +91 9952 822535 |
| செங்கல்பட்டு | திருமதி. செ.சிந்தாமணி | +91 95976 90745 |
| அரியலூர் | திருமதி. சூரியகலா | +91 80985 79762 |
| திண்டுக்கல் | திருமதி. பி. கௌரி பிரபாகரன் | +91 96008 90134 |

## தலைமைப் பயிற்சியாளர்கள்

திருக்குறள் தூயர்
திரு. அ. கோபி சிங்
திருக்குறள் முற்றோதல் பயிற்றகம், தஞ்சாவூர்
+91 88385 11065

திரு. க. கோ. பழனி
திருவள்ளுவர் கல்வி மன்றம், சென்னை
+91 98944 59052

திருக்குறள்
திரு. க. காமராசு
உலகத் திருக்குறள் முற்றோதல் மையம், திருவண்ணாமலை
+91 63802 78863

கவிஞர் தமிழ்க்குழவி
திருக்குறள் வாழ்வியலாக்கப் பயிற்சி மையம், நாகர்கோவில்
+91 9442580620

**மாவட்டத்திற்கு 1000 திருக்குறள் நூல்கள் வீதம்**
**ஆண்டுக்கு 40000 திருக்குறள் நூல்களை**
**அடுத்த பத்து ஆண்டுகளுக்கு இலவசமாக வழங்குவோர்:**
**உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA**

## ஒருங்கிணைப்பாளர்கள்

**திட்ட ஒருங்கிணைப்பு**
திரு. ச. பார்த்தசாரதி
ஆசிரியர், வலைத்தமிழ்
வலைத்தமிழ்.com www.ValaiTamil.com

**அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு**
திரு. சி. இராஜேந்திரன், IRS (ஓய்வு),
ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்
வள்ளுவர் குரல் குடும்பம்

**அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு**
திரு. இரவி சொக்கலிங்கம்,
நிறுவனர், S2S அறக்கட்டளை

**புரவலர் ஒருங்கிணைப்பு**
திரு. கொழந்தவேல் இராமசாமி
Washington DC, USA

திரு. க.செங்குட்டுவன்
திருக்குறள் ஆர்வலர், இந்தியா

திரு. செந்தில் துரைசாமி
திருக்குறள் ஆர்வலர், Texas,USA

## பயிற்சி விவரங்களுக்கு

E-Mail: kural.mutrothal@gmail.com
Web: www.KuralWorld.org
WhatsApp: +91 73055 71897

முற்றோதல் முடித்தவர்கள் பதிவு செய்ய

குறள் வழி
திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்

# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் 2024 இலக்குகள்




- மாவட்டங்களில் பயிற்சிகளை விரிவாக்குதல். மாவட்டத்திற்கு 100 மாணவர்கள் முற்றோதல் பயிற்றுவிக்கும் இலக்கை நோக்கி நகர்தல்.
- தமிழ்நாடு அளவில் 124 என்ற தற்போதைய எண்ணிக்கையை குறைந்தது 1000 ஆக உயர்த்துதல்.
- குறள் வழி இதழை நிலைநிறுத்தி, பதிவு செய்தல்.
- மாவட்ட அளவில் புரவலர், பயிற்சியாளரை விரிவாக்குதல்.
- தொய்வு உள்ள சில மாவட்டங்களில் கவனம் செலுத்தி பலப்படுத்துதல்.
- முற்றோதல் ஆசிரியர் பயிற்சிக் கட்டமைப்பை உருவாக்குதல், பயிற்சியை தரப்படுத்தல் .
- 25 ஆண்டுகால 1200+ முற்றோதல் முடித்தவர்களை தொகுத்து மாவட்டம், பயிற்சியாளர், நாடு வாரியாக இணையத்தில் வெளியிடுதல்.
- முற்றோதல் முடித்தவர்களுக்கு அதிக வாய்ப்புகளை ஏற்படுத்தி முன்னுரிமை அளித்தல்.
- மாவட்ட அளவில் 2024 இறுதியில் திருவள்ளுவர் நாளில் மாவட்ட அளவில் குழுவாக முற்றோதல் செய்யவைத்தல்.
- திருக்குறள் ஆளுமைகளைத் தொகுத்து வெளியிடுதல்.
- 25 ஆண்டுகளாக முடித்தவர்களுக்கு முற்றோதல் இளநிலை சான்றிதழ் வழங்குதல்.
- முற்றோதல் – முதுநிலை நேர்முகத் தேர்வுக்கு பாடத்திட்டம் வரையறை செய்து பயிற்சிக் கையேடு வெளியிடுதல்.
- மாவட்ட அளவில் திருக்குறள் சார்ந்த ஆளுமைகள், ஆர்வலர்களை மாவட்டக் குழுவில் சேர்த்தல். அனைவரும் ஒருங்கிணைந்து
- குழுவாக கைகோர்த்து செயல்படுதல்.
- உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், தமிழிருக்கைக் குழுவுடன் இணைந்து 40000 திருக்குறள் நூல்களை அரசுப்பள்ளி மாணவர்களுக்கு கொண்டுசேர்த்து பயிற்சியை வழங்குதல்.




## திருக்குறள் தற்சார்பு : எங்கள் மாவட்டம்–எங்கள் பொறுப்பு

எங்கள் மாவட்ட மாணவர்களுக்கு, எங்கள் மாவட்டத்தில் படித்த ஒருவருக்கு வேலைவாய்ப்பை ஏற்படுத்தி பயிற்சியாளராக்கி, எங்கள் மாவட்டத்தில் அறம்சார் தொழில் செய்பவர்களைப் புரவலர்களாகக் கொண்டு, எங்கள் மாவட்ட வெளிநாடுவாழ் தமிழர்களின் துணையோடு திருக்குறள் முற்றோதல் பயிற்சியை வழங்கி, உயர்நெறியுடன் கூடிய மாணவர்களை உருவாக்குவோம். திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களாக ஆண்டுக்கு நூறுபேரை உருவாக்கி எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து தமிழ்நாடு அரசு வழங்கும் ரூபாய் 15000 விருதையும், முற்றோதல் சாதனை சான்றிதழையும் பெற உழைப்பது நமது இலக்காகும். திருக்குறள் கற்றுத்தேர்ந்து இளநிலை மனப்பாடம், முதுநிலை பொருள் உணர்தல் என்று இருநிலைகளைக் கடந்த மாணவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, தொழில்வாய்ப்பு, வெளிநாட்டு வாய்ப்புகள் என்று பல்வேறு வாய்ப்புகளை ஏற்படுத்தி, திருக்குறளை முழுதும் படித்தவர்களுக்கு முன்னுரிமை வழங்குவோம். அரசு பெரும்தொகை பரிசு வழங்கினாலும் திருக்குறள் கற்க முன்வராத நிலையை மாற்றுவோம்

அன்பார்ந்த தமிழ்நாடு வாழ், வெளிநாடுவாழ் அன்பர்களே.. தமிழ்நாட்டில் ஆகச்சிறந்த ஒரு செயலை செய்யவேண்டுமானால் அது தனிமனித மாற்றம்தான். அவர்களை நற்சிந்தனையுடன், சமூகப்பொறுப்புடன் உருவாக்கிவிட்டால் அவர்கள் தாங்கள் பிறந்த ஊரை, மாவட்டத்தை, மாநிலத்தை, நாட்டை பெருமைகொள்ளச் செய்வார்கள். எனவே சமூக அக்கறைகொண்ட உங்களை உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்த மாணவர்கள் உருவாக, முற்றோதல் ஆசிரியர்கள் உருவாக அன்புடன் அழைக்கிறோம்

## ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்தை சார்ந்தவர்கள் பொறுப்பேற்றுக்கொள்ளுங்கள்.

**Mayiladuthurai**
**மயிலாடுதுறை**





திரு. ஜெனிபர் பவுள்ராஜ்

**Chengalpattu**
**செங்கல்பட்டு**



திரு. மணி பெரியகருப்பன், ஒகாயோ , அமெரிக்கா

**Salem**
**சேலம்**



முனைவர். தங்கராசு பெரியசாமி

**Karur**
**கரூர்**




திரு. க. செங்குட்டுவன்,
தாளாளர்
Valluvar Science & Management College

**Thiruvarur**
**திருவாரூர்**



திரு. இளங்கோ,
சிங்கப்பூர்

**Pondicherry**
**புதுச்சேரி**



முனைவர். வி. முத்து
தலைவர்,
புதுவைத் தமிழ்ச்சங்கம்

**Dindigul**
**திண்டுக்கல்**



திரு. பாஸ்கர் குமரேசன்,
வெர்சீனியா, அமெரிக்கா

**Thanjavur**
**தஞ்சாவூர்**



திரு. வீ. இளவழுதி,
வெர்சீனியா, அமெரிக்கா

**Ramanathapuram**
**இராமநாதபுரம்**



திரு. மருதுபாண்டியன்,

**பிற தேவைகள் உள்ள மாவட்டங்கள்:** அரியலூர், ஈரோடு, உதகமண்டலம், கடலூர், கள்ளக்குறிச்சி, காஞ்சிபுரம், கிருஷ்ணகிரி, கோயம்புத்தூர், சிவகங்கை, செங்கல்பட்டு, சென்னை, தர்மபுரி, திருச்சி, திருநெல்வேலி, திருப்பத்தூர், திருப்பூர், திருவண்ணாமலை, திருவள்ளூர், தூத்துக்குடி, தென்காசி, தேனி, நாகப்பட்டினம், நாகர்கோயில், புதுக்கோட்டை, பெரம்பலூர், மதுரை, ராணிப்பேட்டை, ராமநாதபுரம், விருதுநகர், விழுப்புரம், வேலூர்

# திருக்குறள் நிகழ்வுகள்

## பிரித்தானிய நாடாளுமன்ற உறுப்பினரின் முன்மாதிரி சிந்தனை



**Uma Kumaran MP** @Uma_Kumaran · 1d

Wonderful to be invited to the Speaker's House, to celebrate the immense contribution of South Asians to Britain & British life 🇬🇧

Proud to give Mr Speaker a copy of Thirukurral, so that the next MP of Tamil heritage can have the opportunity of swearing their oath on this.




South Asian Heritage Month and House of Common...

 92 422 22K  

பிரித்தானிய அரசியல்வாதியும், நாடாளுமன்ற உறுப்பினருமான மாண்புமிகு உமா குமரன் அவர்கள் திருக்குறள் மொழிபெயர்ப்பு நூலை முதன் முதலாக அவர்கள் நாட்டு அவைத்தலைவரிடம் கையளித்துள்ளார். இவர் முதல் தமிழ் நாடாளுமன்ற உறுப்பினர் என்பதால், அடுத்து வரும் தமிழ் உறுப்பினர்கள் திருக்குறளை வைத்து பதவிப்பிரமாணம் செய்யமுடியும் என்று குறிப்பிடுவது மிகச்சிறந்த முன்மாதிரியான சிந்தனை. உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம், உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புத் தொகுப்புத் திட்டக் குழுவின் சார்பாக அவரது செயலை வாழ்த்துகிறோம். பாராட்டுக் கடிதம் அனுப்புகிறோம்.

உயர்மட்டத்தில் உள்ள அனைத்து ஆளுமைகளும், தொழிலில் வெற்றிபெற்றவர்களும் தங்கள் சுய அடையாளம் மேல் பெருமிதம் கொண்டு திருக்குறள் மொழிபெயர்ப்புகளை உயர்ந்த பரிசாகக் கொடுத்துப் பழகவேண்டும்.

# மாவட்டச் செய்திகள்

## திருவண்ணாமலை மாவட்டம்

திருவண்ணாமலை கலைஞர் கருணாநிதி அரசு கலைக்கல்லூரி முதலாம் ஆண்டு மாணவர்களுக்கு திருக்குறள் காட்டும் வாழ்வியல் நெறிகள் என்ற தலைப்பில் திருவண்ணாமலை மாவட்ட பயிற்சியாளரும் தலைமைப்பயிற்சியாளருமாகிய திருக்குறள் க. காமராசு அவர்கள் வழங்கினார்.



















29/7/2024 அரசினர் மாதிரி நகராட்சி பெண்கள் மேல்நிலைப் பள்ளி, திருவண்ணாமலை யில் 400க்கும் மேற்பட்ட பிள்ளைகள் கட்டுரை போட்டி, ஒப்புவித்தல் போட்டி என அனைத்திலும் கலந்து கொண்டார்கள். அதில் திருக்குறள் பற்றிய விழிப்புணர்வு வழங்கப்பட்டது.











வெள்ளகல்பட்டி, நடுநிலைப் பள்ளியில் திருக்குறள் முற்றோதல் செய்யப்படுகிறது. சென்றாண்டு தவப்பிரியா என்ற மாணவி தமிழக அரசின் பரிசை பெற்றார். திறம்பட நடத்துகிற சுந்தரம் தலைமையாசிரியர் அவர்களுக்கு வாழ்த்துக்கள்.

திருவண்ணாமலை மாவட்டத்தில் ஒரே நாளில் ஏழு பள்ளியில் திருக்குறள் வகுப்பு தொடங்கப்பட்டது.

# விருதுநகர் மாவட்டம்

## விருதுநகர் மாவட்ட ஆட்சியரின் புதிய சிந்தனை



மாவட்ட ஆட்சியர் விருதுநகர் மாவட்டம் உயர்திரு வீ.ப. ஜெயசீலன் இந்திய ஆட்சிப் பணி அவர்கள் புதிது புதிதாக சிந்தித்துக் கொண்டிருக்கிறார்

திருக்குறளில் சிந்தனைகளில், திருக்குறள் அறக் கருத்துக்களில் தோய்ந்தவர்.

தீராக்காதல் திருக்குறள் திட்டத்தின் மூலம் தமிழகமெங்கும் போட்டி நடத்தி 15000 பள்ளி கல்லூரி மாணவர்களை ஓவியங்கள் வரையச் செய்தார். அதில் சிறந்த ஓவியங்களை தேர்வு செய்து தமிழ் இணையக் கல்விக்கழகம் வழியாக நாள்காட்டியாக வெளியிட்டார்.

வள்ளுவர் குரல் குடும்பத்தின் வேண்டுகோளை ஏற்று குறள் முற்றோதல் மாணவர்கள் எண்ணிக்கை 70 என்று மட்டும் இருந்த நிலையை மாற்றி, உச்சவரம்பை முற்றிலும் நீக்கவும், பரிசுத் தொகையை உயர்த்தவும் காரணமாக இருந்தவர்.

தற்போது மாவட்ட ஆட்சியராக இருக்கும் போது மாநிலம் தழுவிய 1000 மாணவர்களுக்கு ஒரு வாரம் கோடைக்கால பயிலரங்கம் வெற்றிகரமாக நடத்தினார்.

தற்போது 2 நாள்கள் ஆசிரியர்களுக்கு, பெரும் ஆளுமைகளைக் கொண்டு குறள் கற்பித்தல் பயிலரங்கம் நடத்துகிறார்

தொடர்ந்து திருக்குறள் சார்ந்து இயங்கிக் கொண்டே இருக்கின்றார்.. அறம் விதைக்கிறார்..

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கமும், வள்ளுவர் குரல் குடும்பமும் அவருக்கு இதயங்கனிந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றன.

மற்ற மாவட்ட ஆட்சியர்களும் இவரைப் பின்பற்றினால் நன்று. விரைவில் குறள் சார்ந்த சமுதாயம் உருவாக வழி வகுக்கும். இந்நிகழ்வில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பில் ஒருங்கிணைப்பாளர் திரு.இரவி சொக்கலிங்கம் குறிப்புகளைப் பகிர்ந்து பேசினார். மேலும் புதுவை மாவட்ட பயிற்சியாளர் திருமதி சங்கீதா கண்ணன் திருக்குறள் பயிற்சியாளிப்பது பற்றி விளக்கினார்.



# புதுச்சேரி மாவட்டம்

திருக்குறள் முற்றோதல் தொடக்க விழா அரசு தொடக்கப் பள்ளி, மணவெளி, புதுவையில் நடைபெற்றது.

கலைமாமணி முனைவர் வி.முத்து, தலைவர், புதுவைத் தமிழ்ச் சங்கம் அவர்கள் தலைமை வகித்தார்.

திருமதி. பாலசுந்தரி மற்றும் திருக்குறள் மாணவன் விக்னேஷ் அவர்கள் இருவரையும் அறிமுகப்படுத்தி, முறையான திருக்குறள் முற்றோதல் வகுப்பு துவங்கப்பட்டது.

60 மாணவர்கள் திருக்குறள் பயிற்சி வகுப்பில் இணைந்துள்ளனர். பள்ளி தலைமை ஆசிரியர் மற்றும் அனைத்து ஆசிரியர்களின் ஒத்துழைப்போடு நிகழ்ச்சியானது சிறப்பாக நடைபெற்றது.



# செங்கல்பட்டு மாவட்டம்

டி. இ. எல். சி. தொடக்கப்பள்ளியில் திருக்குறள் வகுப்பு தொடங்கப்பட்டது.



# சேலம் மாவட்டம்

சேலம் மாவட்டம் ஆகநல் பள்ளியில் நடைபெற்ற விழாவில் தயாபரன் ஐயா அவர்கள் கலந்துகொண்டு 1330 திருக்குறளையும் சொல்லக்கூடிய மாணவன் ஆகாஷ் அவர்களிடம் திருக்குறள் கேட்கும் நிகழ்வு நடைபெற்றது.



# கடலூர் மாவட்டம்




வள்ளலார் பணியகத்தின் அலுவலகம் திறப்பு விழா மற்றும் திருக்குறள் வகுப்பு தொடக்க விழா..!

கடலூர் மாவட்டம் முருகன்குடியில் வள்ளலார் பணியகத்தின் அலுவலக திறப்பு மற்றும் திருக்குறள் வகுப்பு தொடக்க விழா ஆடி 07 நாள் (23-07-2024) செவ்வாய்க்கிழமை மாலை 5 மணிக்கு நடைபெற்றது.

விழாவில் சன்மார்க்கிகள், சன்மார்க்க சான்றோர்கள், அறிஞர்கள், ஆய்வாளர்கள், திருக்குறள் ஆய்வறிஞர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

# குன்றக்குடி அடிகளார் பெரியவரின் நூற்றாண்டு விழா!





https://www.youtube.com/watch?v=hVesoTQoB3Q

தவத்திரு குன்றக்குடி அடிகளார் பெரியவரின் நூறாவது பிறந்தநாள் நடப்பாண்டு! ஜுலை 11 ஆம் நாள் தொடங்குகிறது.

உலகத் திருக்குறள் பேரவை செங்கல்பட்டு மாவட்டம் சார்பாக அடிகளாரின் நூற்றாண்டுத் தொடக்க விழா 20–7–2024 சனிக்கிழமை மாலை 5– மணிக்கு தாம்பரம் வள்ளுவர் குருகுலம் மேல்நிலைப்பள்ளியில் (தாம்பரம் பேருந்து நிலையம் அருகில்) நடைபெற்றது.

தஞ்சை தமிழ் பல்கலைக்கழக மேனாள் **துணைவேந்தர் இ.சுந்தரமூர்த்தி** அவர்கள் நூற்றாண்டு விழாவைத் தொடக்கி வைத்துப் பேருரை ஆற்றினார்.

சென்னை பச்சையப்பன் கல்லூரி மேனாள் தமிழ் **பேராசிரியர் முனைவர் தெ. ஞானசுந்தரம்** அவர்கள் சிறப்புரை நிகழ்த்தினார்.

சுங்கம் நடுவண் கலால் சேவை வரித் துறை மேனாள் தலைமை ஆணையர் **சி. இராசேந்திரன்** IRS அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்.

உலகப்புகழ் ஆன்மீகப் புரட்சியாளர் சமுதாயப் சிற்பி காவி போர்த்திய பகுத்தறிவாளர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் பெரியவரின் சாதனைகளை புரட்சிகளை விளக்கி அந்த முப்பெரும் அறிஞர்கள் உரை அமைந்தது.

ஆன்மீக ஞானி தமிழ்மாமுனி உலகத் திருக்குறள் பேரவை நிறுவனத் தலைவர் திருவண்ணாமலை குன்றக்குடி 45 வது சந்நிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் பெரியவரின் நூற்றாண்டு விழாவிற்கு திரளாக அறிஞர்கள் ஆர்வலர்கள் மாணவர்கள் பெற்றோர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர்

திருவள்ளிநாயகம், செயலர் உலகத் திருக்குறள் பேரவை, செங்கற்பட்டு வரவேற்புரை

0:13:00 புதுகை வெற்றி வேலன், தலைவர் உலகத் திருக்குறள் பேரவை, செங்கற்பட்டு வரவேற்புரை

0:45:00 பேராசிரியர் சுந்தரமூர்த்தி உரை

1:17:00 சி இராஜேந்திரன், வள்ளுவர் குரல் குடும்பம் உரை 1:19:16

01:40:00 பேராசிரியர் தெ ஞானசுந்தரம் உரை











# திருக்குறள் உலகப் பரவலாக்கல் உத்திகள்






20.07.2024 அன்று மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம், திருக்குறள் உயராய்வு மற்றும் ஆராய்ச்சி மையம் திருவள்ளுவர் இருக்கை இணைந்து நடத்திய நிகழ்ச்சியில் "திருக்குறள் உலகப் பரவலாக்கல் உத்திகள்" என்ற தலைப்பில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் ஒருங்கிணைப்பாளர் வலைதமிழ் ச பார்த்தசாரதி அவர்கள் பேசினார்.

அதில் கலந்துகொண்ட திரு.மருதுபாண்டியன் என்ற திருக்குறள் ஆர்வலர் அமெரிக்காவில் பல ஆண்டுகள் வசித்துவிட்டு மகன்களுக்கு திருக்குறள் சொல்லிக்கொடுக்கும் பயணத்தில் அவரே ஒரு திருக்குறள் நூலை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். அதை கையளிக்க இன்று நேரில் வந்திருந்தார். சென்னையில் தொழில் செய்யக்கூடியவர்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் தேவையுள்ள மாணவர்களைத் தேர்ந்தெடுத்து சென்னைக்கு கொண்டுவந்து வேலைவாய்ப்பு உள்ளிட்டவற்றை வழங்குவதற்காக ஒரு அறக்கட்டளையை நிறுவி செயல்படுத்திவருகிறார்.

செயல்பாடு குறித்து பேசிக்கொண்டிருந்தபோது உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் இராமநாதபுரம் மாவட்ட ஒருங்கிணைப்பாளராகவும், புரவலராகவும் ஒரு தேவையுள்ளது என்று கூறி பொறுப்பேற்கக் கேட்டுக்கொண்டார். தற்போது மிகவும் பின்தங்கிய நிலையில் ஒரு மாணவர்கூட திருக்குறள் முற்றோதல் செய்யாத இராமநாதபுரம் மாவட்டத்தில் திருக்குறளை வளர்க்க ஒரு பயிற்சியாளரை நியமித்து முற்றோதல் பயிற்சியை பரவலாக்கல் செய்ய முடிவுசெய்யப்பட்டது..

உங்கள் ஊரைப்பற்றி, உங்கள் மாவட்டத்தைப் பற்றி நாங்கள் கவலைப்படுகிறோம். அதற்காக உழைக்கிறோம். திருக்குறளை உங்கள் ஊரில் பரப்பி அறம் சார்ந்த மாவட்டமாக உருவாக்க நீங்கள் பொறுப்பேற்கத் தயாரா? இதைவிட முறைப்படுத்தப்பட்ட பெரும் விளைவுசார்ந்த களப்பணி காண்பது அரிது.. வாருங்கள் வடம் பிடிக்க.. திருக்குறள் தேரை நகர்த்துவோம்.. என்று வேண்டுகோள் விடுத்தார், தொடர்புகொள்ளுங்கள்..

## திருக்குறள் ஆய்வரங்கம் – 30



தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்,

தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்

மயிலை திருவள்ளுவர் தமிழ்ச்சங்கம்

திருக்குறள் உராய்வு மற்றும் ஆராய்ச்சி மையம்

திருவள்ளுவர் இருக்கை

இணைந்து வழங்கும்

திருக்குறள் ஆய்வரங்கம் – 30

நிகழ்வில் "திருக்குறள் பரவலாக்கள் உத்திகள்"

என்ற தலைப்பில் திருக்குறள் சார்ந்த களச் செயல்பாடுகளை

பகிர்ந்துகொள்கிறேன்...

இதுபோல் கேட்கும்போதுதான் நேரம் ஒதுக்கி செயல்பாடுகளை

ஆவணப்படுத்த முடிகிறது.. முழுமையான நம் திருக்குறள்

செயல்பாடுகளை அறிந்துகொள்ள இணையவும்..



# தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம்
## தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்
## மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம்
## திருக்குறள் உயராய்வு மற்றும் ஆராய்ச்சி மையம்
## திருவள்ளுவர் இருக்கை

இணைந்து நடத்தும்

# திருக்குறள் ஆய்வரங்கம் –30

நிகழும் திருவள்ளுவராண்டு 2055 ஆடித் திங்கள் 2–ஆம் நாள்
(18–07–2024)வியாழக் கிழமை அன்று இரவு 7 மணி முதல் 8.30 மணி வரை
இணைய வழியில் நடைபெற உள்ள
திருக்குறள் ஆய்வரங்கம் –30

**பேராசிரியர் முனைவர் சோ.ஆறுமுகம்**
துணைவேந்தர், தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக் கழகம், சென்னை
தலைமையுரை வழங்கவும்,

**திருமிகு வலைத் தமிழ் ச. பார்த்தசாரதி**
மென்பொறியாளர் ,&
திருக்குறளைப் பரவலாக்கும் பணி

**திருக்குறள் நெறியைப் பரவலாகுவதற்கான உத்திகள்**

என்னும் பொருண்மையில்
சிறப்புரை ஆற்றவும் இசைவு அளித்துள்ளார்கள்
இவ்விழாவில் பங்கேற்க அனைவரையும்
அன்புடன் அழைக்கின்றோம்.

கலைமாமணி முனைவர் **சேயோன்**
நிறுவனச் செயலாளர்,
மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம்,
திருவள்ளுவர் இருக்கை,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை.

முனைவர் **சு. பாலசுப்பிரமணியன்**
இயக்குநர்,
தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்த நிலைப்
பல்கலைக்கழகம், சென்னை–15.

# திருக்குறள் ஆய்வரங்கம் –30

நாள்: 18–07–2024,வியாழக் கிழமை  நேரம்: இரவு 7 மணி

## நிகழ்ச்சி நிரல்

வரவேற்புரை :
**பேரா.முனைவர் சு.பாலசுப்பிரமணியன்**
இயக்குனர் தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை–15

தலைமை உரை :
**பேரா.முனைவர் சோ.ஆறுமுகம்**
துணைவேந்தர்,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை.

வாழ்த்துரை :
**முனைவர் கு.இரா.செந்தில்குமார்**
பதிவாளர், தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை–15.

சிறப்புரை **திருமிகு வலைத் தமிழ் ச. பார்த்தசாரதி**
மென்பொறியாளர்&திருக்குறளைப் பரவலாக்கும் பணி.

பொருள்: **திருக்குறள் நெறியைப் பரவலாகுவதற்கான உத்திகள்**

நன்றியுரை :
**முனைவர் மு. வையாபுரி**
உதவிப் பேராசிரியர், தமிழியல் மற்றும் பண்பாட்டுப் புலம்,
தமிழ்நாடு திறந்த நிலைப் பல்கலைக்கழகம், சென்னை–15.

நிகழ்ச்சி அமைப்பு:
**கலைமாமணி முனைவர் சேயோன்**
நிறுவனச் செயலாளர்,
மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச் சங்கம், சென்னை.

zoom

**Join Zoom Meeting**
https://us02web.zoom.us/j/3562722898?pwd=MnczcmM0MlM5WjhDOUNVcC9mRW9HQT09
**Meeting ID: 356 272 2898**
**Password: mtsacademy**

# பரதநாட்டியத்தில் திருக்குறள்

## மேட்டூரில் 8 ஆம் வகுப்பு மாணவன் மோனிஷ் திருக்குறளின் 1330 பாடலுக்கு பரதநாட்டியம் ஆடி உலக சாதனை

**நன்றி: மக்கள் குத்து (தேசிய தமிழ் நாளிதழ்)**

தேசிய தமிழ் நாளிதழ்
மக்கள் குத்து

### மேட்டூர் 8 ஆம் வகுப்பு மாணவன் மோனிஷ் திருக்குறளின் 1330 பாடலுக்கு

**பரதநாட்டியம் ஆடி உலக சாதனை**

சேலம்.மே.07.

சேலம் மாவட்டம் மேட்டூர் பகுதியில் இராமன் நகரில் வசிக்கும் மணிவண்ணன். லாவண்யா அவர்களின் மகன் முனைவர் ம.மோனிஷ், எட்டாம் வகுப்பு, ஸ்ரீ சரஸ்வதி வித்யாலயா பள்ளியில் பயின்று வருகின்றார். சேலம் மாவட்ட அளவில் பரதநாட்டியத்தில் தனித்திறமை படைத்தமைக்காக தமிழக அரசு கலை இளமணி என்ற விருதை வழங்கியுள்ளது. இவர் திருக்குறள் மீது அதிக பற்று கொண்ட காரணத்தினால் திருக்குறளை தேசிய நூலாக அறிவிக்க வேண்டும் என்பதற்காக திருக்குறளில் உள்ள 1330 பாடலுக்கு பரதநாட்டியம் ஆடி உலக சாதனை புரிந்தார். இதற்காக விழா வீரக்கல் புதூர் தேர்வு நிலை பேரூராட்சி செயல் அலுவலர் மூவேந்திர பாண்டியன் தலைமையில் ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் ரங்கநாதன் அவர்கள் மற்றும் ஆல் இந்தியா புக் ஆப் ரெகார்ட் நிறுவனத் தலைவர் செ.வெரெக்கார்ட் நிறுவனத் தலைவர் திரு. வெங்கடேசன் அய்யா அவர்கள் மற்றும் வேலூர் முத்தமிழ் சங்க தலைவர் திருமதி. கலைவாணி அவர்கள் முன்னிலையில் குத்துவிளக்கை ஏற்றி துவங்கி வைத்தனர். நிகழ்வாக சரியாக 6 மணி 6 நிமிடத்தில் துவங்கி 11 மணி19 நிமிடத்தில் முடிவு செய்யப்பட்டது. உலக சாதனை நிகழ்வு சரியாக 5 மணி நேரம் 13 நிமிடம் தொடர்ந்து நடனமாடி உலக சாதனை புரிந்தார். விழா பேரூராட்சி தலைவர் செயல் அலுவலர் மூவேந்தரபாண்டியன் அவர்கள் வாழ்த்துரை வழங்கினார். திருமதி லாவண்யா இல்லம் தேடி கல்வி தன்னார்வலர் நன்றியுரை வழங்கினார். இந்த நிகழ்ச்சியில் சர்வதேச சுற்றுச்சூழல் அமைப்பின் நிறுவனர் கலாநிதி உவைஸ் தமிழ்நாடு சர்வதேச சுற்றுச்சூழல் அமைப்பின் சார்பில் பரதநாட்டியத்தில் பல சாதனைகள் புரிந்து வரும் கலை இளமணி ம.மோனிஷுக்கு நாட்டிய இளவரசர் விருதினை வீரக்கல் புதூர் டவுன் பஞ்சாயத்து மூவேந்திர பாண்டியன் வழங்கினார். மேலும் நிகழ்ச்சியில் சமூக ஆர்வலர் தமிழ்நாடு சர்வதேச சுற்றுச்சூழல் அமைப்பின் தலைவர் செந்தில் முருகன் கலந்து கொண்டார்.

# திருக்குறள் இன்னும் உலக அலுவல் மொழிகளில் எத்தனை மொழிகளில் மொழிபெயர்க்கப்படவேண்டும்?







உலக மொழிகளில் திருக்குறள் தொகுப்புத் திட்டத்தின் முதல் பகுதி (Nov 2018 – Mar 2024) முடிந்து இரண்டாம் பகுதி "திருக்குறள் 2030" தொடங்குகிறது.

முதல் பகுதியில் இக்குழு என்ன செய்து முடித்துள்ளது?

1) திருக்குறள் மொழிபெயர்ப்பு விவரங்களை முழுமையாகத் தொகுத்து மொழிபெயர்ப்பு வரலாற்றுத் தரவுகளை உறுதிசெய்தல்.
2) அச்சுப்பிரதிகளை உலக நாடுகளிலிருந்து சென்னைக்கு வரவழைத்துத் தொகுத்தல்.
3) அனைத்து விவரங்களையும் அச்சிட்டு நூலாக வெளியிடுதல். ஒவ்வொரு ஆண்டும் புதிய மொழிபெயர்ப்பு விவரங்களை சேர்த்து தொடர்ந்து இந்நூலை நம்பமாக, ஒருங்கிணைந்த ஆய்வு அடங்கலாக வெளியிடுதல்.

இரண்டாம் பகுதியில் உலகத் தமிழர்கள் என்ன செய்யவிருக்கிறோம்?

1) நீங்கள் வசிக்கும் நாட்டின் மொழியில் திருக்குறள் மொழிபெயர்ப்பு உள்ளதா? – அதை பரவலாக்க, பயன்பாட்டுக்குக் கொண்டுவர என்ன செய்யவேண்டும் என்று சிந்திப்போம்.
2) நீங்கள் வசிக்கும் நாட்டின் மொழியில் திருக்குறள் மொழிபெயர்ப்பு இல்லையா, மொழிபெயர்க்க என்ன செய்யவேண்டும்? சிந்திப்போம்.

உங்கள் நாடுகளில் இதுகுறித்து எங்களோடு சேர்ந்து சிந்திக்க தொடர்புகொள்க.

நாம் இன்னும் மொழிபெயர்க்கவேண்டிய உலக நாடுகளின் அலுவல் மொழிகளின் எண்ணிக்கை: 158

முழுவிவரங்களும் இடம்பெற்றுள்ள "Thirukkural Translations in World Languages" நூலைப்பெற https://estore.valaitamil.com/

# நவில்தொறும் நூல்நயம்

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்

வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 71

இணைந்து வழங்கும்

நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

12.07.24
வெள்ளிக்கிழமை
மாலை
6.30-7.45

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

நூல்–நூலாசிரியர்

'அழகர் விருந்து'

புலவர் இரா.உ.விநாயகம், சொற்பொழிவுகள்

திரு. எஸ். முத்துராமன் M.A.BEd., தொகுப்பாசிரியர்

நூல் பற்றிய நயவுரை

இராம.தீத்தாரப்பன், செயலாளர்
திருவள்ளுவர் கழகம், தென்காசி.

அழகர் விருந்து

திரு.எஸ்.முத்துராமன்

watch on: https://www.valaitamil.tv
https://karka.in

---

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்

வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 72

இணைந்து வழங்கும்

நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

கல்லூரி மாணவர்கள் / இளைஞர்கள் உரையாற்றும்
முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதன்
எழுதிய திருக்குறள் நூல்களின் சிறப்புத் தொடர்-1

19.07.24
வெள்ளிக்கிழமை
மாலை
6.30-7.45

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

நூல்–நூலாசிரியர்

'வள்ளுவரும் குறளும்'

முத்தமிழ்க் காலவர் கி.ஆ.பெ.விசுவநாதம்

நூல் பற்றிய நயவுரை

பொறிஞர். திரு.மா.விக்னேஸ்வரன்
மூத்த வருவாய் ஆய்வாளர்

வள்ளுவரும் குறளும்

watch on: https://www.valaitamil.tv
https://www.voiceofvalluvar.org
https://karka.in
https://www.youtube.com/ValaiTamil
https://www.valaitamil.com

---

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்

வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 70

இணைந்து வழங்கும்

நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

05.07.24
வெள்ளிக்கிழமை
மாலை
6.30-7.45

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

நூல்–நூலாசிரியர்

'குறளோவியம்'

முத்தமிழறிஞர் கலைஞர் மு.கருணாநிதி

நூல் பற்றிய நயவுரை

திரு. ஸ்டாலின் இராமகிருஷ்ணன்,
பொது மேலாளர், வேதிப்பொருள் தொழிற்சாலை, சென்னை.

குறளோவியம்

கலைஞர் மு.கருணாநிதி

watch on: https://www.valaitamil.tv
https://www.voiceofvalluvar.org
https://karka.in
https://www.youtube.com/ValaiTamil
https://www.valaitamil.com

# திருக்குறள் 2030 – பகுதி 2

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் முதல் கட்டப் பணிகள் நிறைவடைந்து இரண்டாம் கட்டப்பணிகள் தொடங்குகிறது.




## தேடப்படும் திருக்குறள் அச்சு நூல்கள்

**TRANSLATIONS HARD COPIES IN OUR GLOBAL SEARCH LIST**

1. Czech
2. Dutch
3. Finnish
4. Italian
5. Garo
6. Konkani
7. Russian
8. Santali
9. Spanish
10. Swahili

திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள்

மாணவர் பெயர் | நாடு Select | மாநிலம் Select | SEARCH

பதிவு செய்ய

| # | மாணவர் எண் | பெயர் | நாடு | மாநிலம் | மாவட்டம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | 331 | ச.கோபிகா | India | Tamil Nadu | tiruchirappalli | 2022 |
| 2. | 330 | மு. நிஷார்னியா | India | Tamil Nadu | thanjavur | 2022 |
| 3. | 329 | க. சந்தான லட்சுமி | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 4. | 328 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 5. | 327 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 6. | 326 | ர. செஞ்சோலை | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 7. | 325 | ஸ்ரீ .ஸ்ரீ வர்ஷன் | India | Tamil Nadu | nagapattinam | 2022 |
| 8. | 324 | சீ. யாழ்த்தமிழ் | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 9. | 323 | டே.ஜான் டேவிட் | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 10. | 322 | இரா.ராஜ்குமார் | India | Tamil Nadu | theni | 2015 |



## இதுவரை உலக அளவில் திருக்குறளை முழுமையாகப் படித்து முற்றோதல் செய்துள்ளவர்கள் யார்? ஆவணப்படுத்த புதிய இணையதளம்..

2000 வது ஆண்டில் திருக்குறள் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்கு பரிசுத் தொகை வழங்கும் திட்டத்தை அரசு தொடங்கியது. கடந்த 23 ஆண்டுகளில் தமிழ்நாடு முழுதும் சுமார் 812 பேர் 1330 திருக்குறளையும் கூறி பரிசு பெற்றுள்ளார்கள் என்று தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர்.அவ்வை அருள் தெரிவித்துள்ளார். 14.04.1972 முதல் இயங்கிவரும் திருச்சி திருமூலநாதன் அறக்கட்டளை 01.05.1998 முதல் 26 ஆண்டுகளாக திருக்குறள் ஒப்பிடுதல் போட்டியை நடத்திவருகிறது. அவர்கள் வழங்கும் 2000 ருபாய் பரிசைப் பெற்றவர்கள் 400 பேருக்கு மேல் உள்ளனர். இதுபோல் வேறு அமைப்புகளும் செய்துகொண்டிருக்கலாம். அமெரிக்கா உள்ளிட்ட வெளிநாடுகளில் முற்றோதல் செய்தவர்கள் பலர் உள்ளனர்.

இவர்களை ஒரு குழுமமாக தொகுத்து வெளியிடுவதும், இவர்களுக்கு அனைத்திலும் தமிழ்ச்சமூகம் கல்வி, வேலைவாய்ப்பு, மேடைவாய்ப்பு, பொருளாதார வாய்ப்பு, தொழில் உள்ளிட்ட அனைத்திலும் முன்னுரிமை வழங்கவும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஒரு சிறப்பு இணையதள வசதியை ஏற்படுத்தி ஆவணப்படுத்தி வெளியிடுகிறது. உங்களுக்குத் தெரிந்தவர்களை பதிவு செய்ய இங்கு செய்யவும்.

முதல்கட்டமாக இவர்கள் அனைவர்க்கும் உலகத்திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள்-இளநிலை சான்றிதழ் வழங்கி, பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களை அடையாளம் கண்டு திருக்குறள்-முதுநிலை சான்றிதழ் வழங்கவிருக்கிறோம். இளநிலை முடித்தவர்கள் , முதுநிலை படிக்க ஊக்குவிக்கப்படுகிறார்கள்.

https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php

or

www.Thirukkural.ValaiTamil.com

# திருக்குறள் புரவலர்களுக்கு நன்றி...

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்திற்கு ஒரு தமிழ் பேராசிரியரை தொடக்கத்தில் பகுதி நேரமாகவும், தேவையானால் முழு நேரமாகவும் வழங்கி, "குறள் வழி" திருக்குறள் மாத இதழ் அட்டைப்பட விளம்பரமாக மாதம் ரூபாய் 10000 வழங்கி ஆதரவு அளிக்கும் வள்ளுவர் அறிவியல் மற்றும் மேலாண்மைக் கல்லூரிக்கும், அதன் தாளாளர் திரு.செங்குட்டுவன் அவர்களுக்கும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.





இவ்விதழ் மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், பயிற்சியாளர்களுக்கு அச்சுப்பிரதியாக இலவசமாக சென்று சேரவேண்டும் என்று புரவலராக தன்னை இணைத்துக்கொண்ட நாமக்கல் நண்பர் திரு.கதிரவன் செழியன் அவர்களுக்கு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். நன்றி... நன்றி...










# திருக்குறள் உழவாரப்பணி

(சென்னை – புதுக்கோட்டை – தஞ்சாவூர் – மதுரை )

## தன்னார்வலர்கள் தேவை

**தன்னார்வப்பணி:**

திருக்குறள் நூல்களை ஒழுங்கு செய்து அதன் அட்டைப்படம், பதிப்பக விவரங்களை வருடி பி.டி.எப். வடிவில் சேமிக்க உதவி தேவை.

* வார இறுதிநாட்களில் ஐந்துபேர் கொண்ட குழுவாக சென்னையில் திருக்குறள் நூல் தொகுப்புகள் உள்ள இடங்களில் கூடவேண்டும்.
* வருடி (scanner) உள்ளிட்ட உபரணங்கள் ஏற்பாடு செய்து பயிற்சி வழங்கப்படும்.
* திருவள்ளுவர் படம் பதித்த சட்டை (T–shirt) ஏற்பாடு செய்யப்படும்.
* தன்னார்வப் பணிக்கு உரிய அங்கீகாரம், சான்றிதழ் வழங்கப்படும்.

ஒருங்கிணைப்பாளர்: ஹேமலதா

ஆர்வமுள்ளவர்கள் பதிவுசெய்ய

+91 7305571897

# சிற்றினம் சேராமை!

## கவிமாமணி இரஜகை நிலவன், மும்பை

சிற்றினம் சேராமை என்பது சிறிய இனத்தைக் குறிப்பதை விட அவர் சொல்லும் மொழியிலே தாழ்ந்த குணங்களைக் கொண்ட சிறிய குழுவினருடன் இணையும் ஒரு மாண்புடைய மனிதன் பன்றியோடு சேர்ந்த கன்றுக்கே ஒப்பாவான் என்பதை வள்ளுவர் மிகத் தெளிவாக குறிப்பிடுகிறார்.

மாந்தர்கள் எப்போதுமே உயரிய கொள்கைகளோடும் உயிரிய கலாச்சாரங்களோடு வாழ வேண்டும் என்பதே வள்ளுவரின் மிகப்பெரிய நோக்கமாக இருந்திருக்கிறது.வள்ளுவனார் சிறிய அல்லது தாழ்ந்த குணம் கொண்ட கெட்ட குணமுடைய மாந்தரோடு இணைவது எவ்வளவு மோசமான செயல்………

அது எவ்வாறு, ஒரு மனிதனை தரைமட்டத்திற்கு இழுத்துச் செல்கிறது. அவனுடைய வாழ்க்கை பாதையை எவ்வளவு மோசமாக…. தரம் கெட்டதாக மாற்றி அமைக்கிறது என்பதை தன்னுடைய இந்த பத்து குறள்களிலும் மிக அழகாக எடுத்துக் கூறுகிறார்.

வள்ளுவன் தன்னை உலகிற்கு தந்து வான் புகழ் கொண்ட இந்த தமிழ்நாட்டிலே அந்த திருக்குறளின் வடிவத்தில் அவர் குறிப்பிடுகின்ற சிற்றினம் சேராமை என்னும் இந்த அதிகாரத்திலே தாழ்ந்த மக்களோடு (தாழ்ந்த மக்கள் என்றால் தரம் கெட்ட குணத்தோடு இருக்கின்ற மக்களோடு) மனிதர்கள் எப்பொழுதுமே இணையக் கூடாது என்பதே அவர் இந்த காப்பியத்தில் அழகாக பத்து குறள்களிலும் மிக வடிவமாக குறிப்பிடுகிறார்.

வள்ளுவர் 1330 குறளிலும் பல கருத்துக்களை மிக அழகாக குறிப்பிட்ட போதிலும் இந்த சிறி சேராமை என்ற அதிகாரத்தில் மனிதநேயம் எவ்வாறு வாழ வேண்டும் என்றும், எத்தகைய குணங்களோடு இருக்க வேண்டும் என்றும், எத்தகைய குணங்களோடு இருப்பவரோடு சேர வேண்டும் என்பதை மிகவும் தெள்ளத் தெளிவாக குறிப்பிடுகிறார்.

உலகப் பொதுமறையாம் திருவள்ளுவரின் திருக்குறளில் சிற்றினம் சேராமை அதிகாரத்தில் வள்ளுவர் இவ்வுலகில் மனித குலத்தில் மாண்புகளை எவ்வாறு எடுத்துரைக்கிறார் என்பது இந்த கட்டுரையின் நோக்கம்

**முன்னுரை:**

இந்த சிற்றினம் சேராமை என்ற அதிகாரத்திலே வள்ளுவர் சேற்றோடு சேர்ந்து மழை நீரும் சேறாகி விடுவது போல மேன்மக்கள் தாழ்ந்த குணத்தாரோடு சேரும்போது, அவர்களும் தங்களுடைய நல்ல குணங்களை இழந்து விடுகிறார்கள் என்பதை மிகத் தெள்ளத் தெளிவாக இந்த பத்து குறள்களிலும் எடுத்துக்காட்டுகிறார்.

தாழ்ந்த குணங்களைக் கொண்டவரோடும் தாழ்ந்த எண்ணங்களைக் கொண்டவரோடும் இணைய…

இணைந்து சேர்ந்து போக வேண்டாம் என்பது திருவள்ளுவரின் மிக மேன்மையான கருத்தாக மாறுகிறது.

**குறள் 451:**

**சினத்தினால் வரும் பேரழிவு**

சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்

சினம் என்னும் குணத்தை வாழ்க்கையில் பெரிய மேன்மையான மக்கள் ஒதுக்கி வைப்பர். ஆனால் தாழ்வான குணம் கொண்ட மக்களோ சினத்தையே சிரத்தில் தூக்கி நிற்பார்.

ஆனால் சினத்தினால் வரும் பேரழிவை உணராமல் சிற்றினம் கொண்ட தாழ்மையான மக்கள் காலங்காலமாக இழி நிலையில் வாழ்வதையே வள்ளுவரின் சிற்றினம் சேராமை தன்னுடைய முதல் குறளிலேயே ஏழு சொற்களிலே எவ்வாறு மக்கள் வாழ பழகிக் கொள்ள வேண்டும் என்றும் சிற்றினம் சேராமை குணம் உள்ளவர்களாக மேன்மையான மக்கள் கெட்ட குணமுடையோருடன் சேராமல் இருப்பார்கள் என்றும், தாழ்மை குணம் உள்ள மக்களோ அவருடைய குண நலமுள்ளவர்களோடே நட்புக் கொள்வார்கள் என்றே அழகாக குறிப்பிடுகிறார்.

இதையே மு.வ, அவர்கள் "பெரியோரின் இயல்பு சிற்றினத்தை அஞ்சி ஒதுக்கும், சிறியோரின் இயல்பு அதையே சுற்றமாக எண்ணித் தழுவிக் கொள்ளும்," என்கிறார்.

பெரியோர் சிற்றினத்தாரோடு சேர அஞ்சி விலகுவர்; சிறுமைக்குணம் கொண்டோர் சிறியோர் கூட்டத்தைச் சுற்றமாக எண்ணிச் சூழ்ந்து கொள்வர் என்பது இக்குறட்கருத்து

**குறள் 452:**

**நீரின் இயல்பு**

நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு

படிகத் தெளிவான வானிலிருந்து விழும் மழை, வானில் இருந்து இறங்கி பூமிக்கு வரும் போது, அழகாகத்தான் வந்து இறங்குகிறது. ஆனால், அது கலக்கும் சேறானது அதன் குணத்தையே மாற்றிவிடும். அதுபோல எவ்வளவோ மேல் குணம் உள்ளவர்கள், தாழ்ந்த குணம் உள்ள மக்களோடு இணையும் போது.... நட்பு கொள்ளும் போது அவர்களிடையே தன் நிலை மறந்து அவர்களும் தாழ் நிலைக்கு தங்களை மாற்றிக் கொள்கிறார்கள் என்பதையே வெளிப்படுத்தி காட்டுகிறார்.

தான் சேர்ந்த நிலத்தின் தன்மையால் நீர் தன் இயல்பை இழந்து, நிலத்தின் இயல்பாகவே மாறிவிடும்; மனிதரின் அறிவும் அவர் சேர்ந்த இனத்தின் இயல்பாகவே ஆகிவிடும் என சாலமன் பாப்பையா தன் உரையில் குறிப்பிடுகிறார்.

**குறள் 453:**

**உலகத்தாரால் அடையாளப்படுத்தப்படுதல்**

மனத்தானாம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானாம்
இன்னா னெனப்படுஞ் சொல்

வையக மாந்தர் மனதிலும் எண்ணங்களில் நாளும் எழிலாலுமே அவருடைய குணத்தை வளர்த்துக் கொள்ள முடியும்.ஆனால் அவருடைய அடையாளமோ அவர் எந்த இனத்திலிருந்து வந்தார் என்பதை பொறுத்து அது உலகத்தாரால்

அடையாளப்படுத்தப்படும் என வள்ளுவன் தன்னுடைய மூன்றாவது குறளில் அருமையாக சுட்டிக்காட்டுகிறார்.

ஒருவரின் உணர்ச்சி, மனத்தைப் பொருத்து அமையும் அவர் இப்படிப்பட்டவர் என்று அளந்து சொல்வது அவர் சேர்ந்திடும் கூட்டத்தைப் பொருத்து அமையும் என கலைஞர் குறிப்பிடுகின்றார்.

**குறள் 454:**

**இனத்தின் ஆற்றலே**

மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்
கினத்துள தாகும் அறிவு

ஒருவருடைய மனதில் உள்ள அறிவு அளவு அறிவாளி போல வெளிப்படும். அவருடைய வெளிப்படுத்தும் ஆற்றலானது அவருடைய சொந்த ஆற்றலாக தோன்றினாலும் அவர் சேர்ந்து இருக்கும் இனத்தின் ஆற்றலிலே அது வெளிப்படுகிறது என்பதை தெளிவுபடுத்துகிறார்

அறிவு ஒருவன் மனத்துள் இருப்பது போலத் தோன்றும்; உண்மையில் அது அவன் சேர்ந்துள்ள இனத்தின்பால் இருந்து பெறப்படுவதே ஆகும் என் பரிமேலழகர் தெரியப்படுத்துகிறார்.

**குறள் 455:**

**மனத்தூய்மை:**

மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்

ஒருவரின் மனசு கட்டுப்பாடு, அவனுடைய செயல்படும் அன்றாடச் செயல்கள் தூய்மை எல்லாமே ஒருவருக்கு அவருடைய தூய்மையாக தோன்றினாலும் அது அவன் சார்ந்த இனத்தின் மூலமே உருவாகிறதென தெளிவுபடுத்துகிறார்.

மனத்தின் தூய்மை செய்யும் செயலின் தூய்மை ஆகிய இவ்விரண்டும் சேர்ந்த இனத்தின் தூய்மையைப் பொறுத்தே ஏற்படும் என்கிறார் மு.வ..

**குறள் 456:**

**செய்த நற்செயல்கள்:**

மனந்தூயார்க் கெச்சநன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை

**குறள் 457:**

**மனத்தின் இயல்பு**

மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும்.

மனத்தின் இயற்பில் நற்குணம் கொண்டோர்கள் வாழ்வில் சான்றோர்களாக இருந்தாலும் அவர்கள் சார்ந்த இனமே அவர்களை இன்னும் மேன்மக்களாக காண்பிக்கும்.

மனத்துயர் மாண்பு எனும் வரிகளிலே எத்தனை தான் மாந்தர்கள் தங்களுடைய சுய முன்னேற்றத்திலும் பிறர் நலத்திலும் ஈடுகொண்டாலும் எண்ணத்திலும் எழுத்திலும் செயலிலும் அவர்கள் சான்றோர்களாக திகழ்ந்தாலும் அவர்கள் சார்ந்த இனமே அவர்களை இன்னும் மேன்மையான மக்களாக உலகின் மனிதர்களின் மாமனிதர்களாக எடுத்துப் பேசும்.

இதை, சாலமன் பாப்பையா விளக்க உரையில்

நிலைபெற்று வரும் உயிர்களுக்கு மனநலம் சிறந்த செல்வம் தரும்; இன நலமோ எல்லாப் புகழையும் தரும் எனக் கூறுகின்றார்.

**குறள் 458:**

**அதிக காவல்:**

மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து

மனத்தின் நன்குணம் கொண்டோர்களாக – சான்றோர்களாக இருந்தாலும், அவர்கள் மனதின் நன்மையை உறுதியாகக் கொண்டிருந்தாலும் அவர்கள்

சார்ந்த இனமே அவர்களுக்கு இன்னும் அதிக காவலாக அமையும் என்று வள்ளுவன் குறிப்பிடுகிறார்.

இதையே, மு.வ. அவர்கள்., மனதின் நன்மையை உறுதியாக உடையவராயினும் சான்றோர்க்கு இனத்தின் நன்மை மேலும் நல்ல காவலாக அமையும் என்கிறார்.

**குறள் 459:**

**மறுமையில் உதவி:**

மனநலத்தி னாகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து

ஒருவருக்கு மனத்தினால் எழும் நல்ல எண்ணங்களும் பிறர் நலத்தில் ஆர்வங்களும் அவர் செய்யும் நற்செயல்களும் மறுமையை பெற்றுத்தரும். இருப்பினும் அவர்கள் சார்ந்த இனம் இன்னும் அவர்களுக்கு மறுமையில் உதவியைப் பெற்றுத் தருவதோடு மாட்சியை வரவழைக்கும் என்றும் வள்ளுவர் குறிப்பிடுகிறார் என்பது மனத்தின் கண் மாசிலன் ஆதல் என்பது மனதில் எழும் உயர்ந்த எண்ணங்களும் ஆற்றல் மிகு செயல்களுமே அந்த தனி மனிதருக்கு மறுமையில் வீடு பேற்றைப் பெற்றுத் தரும் என்றும் அவர் சேர்ந்த இனத்தின் மூலம் இன்னும் மறுமையில் அவர் மாட்சியோடு வழங்குவார் என்றும் வள்ளுவன் குறிப்பிடுகிறார்.

**குறள் 460:**

**துணை:**

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில்

ஒருவருக்கு நல்ல இனம் தான் துணையாக இருக்கும்என்றும், தீய இனத்தோடு சேர்வதைக் காட்டிலும் துன்பம் தரக்கூடியதும் எதுவுமே இல்லை. அவர்கள் சார்ந்த இனமே அவர்களை இன்னும் மேன்மையான மக்களாக உலகின் மனிதர்களின் மாமனிதர்களாக எடுத்துப் பேசும்.

கெட்ட இனமோ அவர்களுக்கு அதிகத் துன்பத்தை தருவதோடு அவர்களை இழி நிலைக்கே எடுத்துச்செல்லும் என்று வள்ளுவன் குறிப்பிடுகிறார்.

இதையே கலைஞர், நல்ல இனத்தைக் காட்டிலும் துணையாக இருப்பதும், தீய இனத்தைக் காட்டிலும் துன்பம் தரக்கூடியதும் எதுவுமே இல்லை என்கிறார்.

**முடிவுரை:**

மனதின் தூய்மையை பொறுத்தே மாந்தரின் வாழ்க்கையும் அமையும் என்றும் தாழ்ந்த குணங்களுடைய மக்களோடு சேர்ந்து நம்மையும் தாழ்த்திக் கொள்ளாமல் உயர்ந்த குலத்தோடு உள்ள மக்களோடு இணைந்து வாழ வேண்டும் என்றும் அவ்வாறு வாழும் போது தான் மனித குலம் மேம்படையும் என்றும் இல்லையெனில் மழை நீர் ஆனது சேற்றிலே கலந்து உடன் அதன் குணமே மாறிவிடுவது போல நல் மாந்தரின் குணங்களும் தாழ்ந்த குணத்தை உடைய மக்களோடு சேரும்போது தரம் கெட்டுப் போகிறது என்பதே திருவள்ளுவர் இந்த பத்து அழகிய குறள் பாக்களிலும் மிகத் தெளிவாக நமக்கு குறிப்பிட்டுள்ளார்.

மண்ணில் பிறக்க மாதவம் செய்த மாந்தராகிய நாமும் நற்குணங்களைக் கொண்டு மழை நீராக உயர்ந்த குணத்தோடு வாழ்ந்து, நல்ல நிலத்திலே விழும் நல்ல மழை துளியாக இவ்வுலக உயிருகளுக்கு உதவிடும் உயர்குணம் உள்ள மாந்தராக வாழ்ந்து, வாழ்க்கையை வளத்துடன் வழிநடத்தி இவ்வாறு ஒரு மனிதன் இவ்வுலகில் வாழ்ந்தால் என்று வரலாறு சொல்லும் படி நாம் இவ் வாழ்க்கையில் இருந்து விடைபெற வேண்டும் என்று வள்ளுவன் நமக்கு மிக அழகாக வழிகாட்டுகிறார்

சிறு குணம் கொண்டவர்களோடு சேராமல் இருப்பதையும் அதன் சேர்ந்தால் அதன் விளைவுகளையும் மிக அழகாக எடுத்துக்காட்டும் வள்ளுவர் தன்னுடைய 46 ஆம் அதிகாரத்தில் மழை நீரானது எவ்வளவு அழகான வெள்ளி கம்பியாக பூமியிலே விழுந்து அது சேரும் இடத்திலே சேரா இருந்தால் சேரோடு இணைந்து அதன் தன்மையை இழந்து விடுகிறது என்பதையும் மாந்தர்தம் நற்குணங்களும் சிறு குனங்குழு தாழ்ந்த குணங்களை உள்ள மனிதரோடு சேரும்போது

அவ்வாறு மாறி போகிறது என்பதையும் மிகத் தெள்ளத் தெளிவாக தெய்வப்புலவர் இந்த பத்து குரல்களிலும் நமக்கு அழகாக எடுத்துக்காட்டுகிறார்

பொதுமறையாம் திருவள்ளுவரின் திருக்குறளில் சிற்றினம் சேராமை அதிகாரத்தில், வள்ளுவர், இவ்வுலகில் சிற்றினம் சேராமையால் மனித குலத்திலன் மாண்புகள் எவ்வளவு உயர்ந்ததே என்றே எடுத்துரைக்கிறார்.

---

# உலகம் முழுதும் நடைபெறும் திருக்குறள் நிகழ்வுகள்

## நடக்கவிருப்பவை

விவேகானந்தா கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி - திருச்செங்கோடு,
பத்மவாணி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி - சேலம்,
அந்தமான் தமிழர் சங்கம் - போர்ட் பிளேர்,
தமிழ்த்தாய் அறக்கட்டளை - தஞ்சாவூர்.
இணைந்து நடத்தும்.

**உலகத் திருக்குறள் ஆறாவது மாநாடு - 2024**

தொடக்கவிழா நாள்:
25.08.2024
ஞாயிற்றுக்கிழமை
அந்தமான் தமிழர் சங்கம்,
போர்ட்பிளேர், அந்தமான்.

நிறைவு விழா :
29.09.2024 ஞாயிற்றுக்கிழமை
பத்மவாணி மகளிர் கலை (ம)
அறிவியல் கல்லூரி, சேலம்,
தமிழ்நாடு - இந்தியா.

மாநாட்டுத் தலைமை :
கலைமாமணி **முனைவர் வி.முத்து**
தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம், புதுச்சேரி.

திருக்குறள் ஆய்வறிஞர்களையும், தமிழ்ச் சான்றோர்களையும்,
தமிழார்வலர்களையும் அன்புடன் வரவேற்கிறோம்.

தொடர்புக்கு : 0091-7530002454, 94439 38797, thamilthaitrust@gmail.com

Austin Tamizh Sangam
ஆஸ்டின் தமிழ்ச் சங்கம்
www.austintamilsangam.com

Register URL:
https://tinyurl.com/atstc24

சனிக்கிழமை, செப்டம்பர் 28
காலை 10:00 மணி முதல் மாலை 4:00 மணி வரை

2024
**திருக்குறள் ஒப்பித்தல் போட்டி**

முதல் நிலை: 25 திருக்குறள்
உங்கள் விருப்பப் பட்டியலில் இருந்து ஏதேனும் 12 திருக்குறள் வரை கேட்கப்படும்

இடை நிலை: 50 திருக்குறள்
உங்கள் விருப்பப் பட்டியலில் இருந்து ஏதேனும் 20 திருக்குறள் வரை கேட்கப்படும்

உயர் நிலை: 75 திருக்குறள்
உங்கள் விருப்பப் பட்டியலில் இருந்து ஏதேனும் 25 திருக்குறள் வரை கேட்கப்படும். நேரம் இருந்தால் பொருளும் தமிழில் கேட்கப்படும்.

இடம்:
சீடர் பார்க் பொழுது போக்கு மையம்
1435 மெயின் தெரு, சீடர் பார்க் டெக்சஸ் 78613









ஊடகப் பங்குதாரர்:




145, சாந்தோம் நெடுஞ்சாலை, மயிலாப்பூர், சென்னை - 600 004,
தொலைபேசி: 044 - 40214100

# திருக்குறள் விழா

## 2024

# ஓவியப் போட்டி




# குறள் பேசு வாகை சூடு!

# நடந்துமுடிந்தவை



**10.7.2024 அறிவன் (புதன்) கிழமை**

*மா.செ.தமிழ்மணி ஆசிரியர்*

**நினைவுநாளில்**

**ஆயிரம் திருக்குறள்களை மனப்பாடம் செய்த**



## மாத்தூர் மாணவர்களுக்குப் பாராட்டு விழா

இடம் : மாத்தூர் கூத்து மேடை நேரம் : மாலை 6 மணி

தலைமை

திருவாளர் **த. தமிழினியன்,** அவர்கள், (முன்னாள் ஊராட்சி மன்றத் தலைவர், மாத்தூர்)

வரவேற்புரை

செல்வன் **த.வா. செந்திறல்,** திருக்குறள் வழிநடை, மாத்தூர்

பாராட்டுப் பெறும் மாணவர்கள்

செல்வி **செ. சஜிதா,** (திருவாளர்கள் செல்லன் – ஜெயமணி இணையரின் மகள்)

செல்வி **மோ. தர்ஷினி,** (திருவாளர்கள் மோகன் – துர்கா இணையரின் மகள்)

செல்வன் **செ. கிருஷ்ணசாமி,** (திருவாளர்கள் செல்லன் – ஜெயமணி இணையரின் மகன்)

செல்வி **நீ. மைத்ரேயி,** (திருவாளர்கள் சே. நீலகண்டன் – நீ. வனஜா இணையரின் மகள்)

பாராட்டிப் பரிசளிப்பவர்

மருத்துவச் செம்மல் **விழுனா மூர்த்தி** அவர்கள்

பொறுப்பாளர், திருவள்ளுவர் அறக்கட்டளை, கன்னியாகுமரி

வாழ்த்துரை

திருவாளர் **செல்லப்பன்** அவர்கள், மாங்கால்

புலவர் **கு. பரமானந்தம்** அவர்கள், உலகப் பொதுமறை திருக்குறள் பேரவை, காஞ்சிபுரம்

திருவாளர் **சிந்தாமணி அம்மையார்** அவர்கள், செங்கற்பட்டு

திருக்குறள் திறப்பாட்டு போட்டி நிகழ்த்துநர்

திருவாளர் **ஆ. குறளமிழ்தன்** அவர்கள், உலகப் பொதுமறை திருக்குறள் பேரவை, காஞ்சிபுரம்

இசைப்பாடல்கள்

செல்வி **க.மு. தமிழொளி,** தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழக மாணவி

சதிராட்டம்

செல்வி **பி.க. வேய்ங்குழலி,** திருவாளர்கள் உலக.பிரபாகரன் – கண்ணகி இணையரின் மகள்

நன்றியுரை

மருத்துவர் **த.அ. யாழினி,** அருணா ஆதுரசாலை, செய்யாறு

அழைத்து மகிழும் : **தமிழ்.முகிலன்,** திருவள்ளுவர் அறக்கட்டளை, கன்னியாகுமரி

**திருக்குறள் வழிநடை, மாத்தூர்**

# உலகெங்கும் திருக்குறள் பரப்பும் மாத இதழ்




விளம்பர ஆதரவுக்கு

முழு பக்கம் வண்ணம் - ரூ. 10000/- மாதம்
அரை பக்கம் வண்ணம் - ரூ. 5000/- மாதம்

E-mail : kuralvazhi@gmail.com
Phone : +91 73055 71897




திருக்குறளுக்கான ஒருங்கிணைந்த உலகத் தகவல்களுடன் வரும் "குறள் வழி" மாத இதழ் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா? தொடர்ந்து வர துணைநிற்க ஆர்வமா? ஒரு முழுநேர ஆசிரியர் குழுவைக் நியமித்து தரப்படுத்திக் கொண்டுவர உங்கள் நிறுவனம், அமைப்பு சார்ந்த விளம்பரம் கொடுத்து உதவலாமே...

To see all the Magazine



www.KuralWorld.org

"குறள் வழி" மாத இதழ் என்ன செய்கிறது?

- தமிழ்நாடு, பாண்டிச்சேரியில் அனைத்து மாவட்டங்களில் நடக்கும் திருக்குறள் படிக்கும் மாணவர்களை ஊக்கப்படுத்தி திருக்குறள் சார்ந்த செயல்பாடுகளை, பரப்புரை நிகழ்வுகளை இணையத்திலும், இதழிலும் தொகுத்து வெளியிடுகிறது..
- பிற தலைப்புகளைத் தொடாமல் திருக்குறள், திருக்குறள் நூல்கள், திருக்குறள் வரலாறு, திருக்குறள் நிகழ்வுகள், திருக்குறள் ஆய்வுகள், திருக்குறள் ஆளுமைகள், திருக்குறள் ஆர்வலர்கள், திருக்குறள் சார்ந்த வாழ்வியல் முன்னெடுப்புகள், உலகத் திருக்குறள் நிகழ்வுகள் என்று மட்டும் கவனம் செலுத்தும் இதழ்.









குறள் சொல்வோம்..!
குறள் வழி வாழ்வோம்..!







## மாணவ- மாணவியர்களுக்கு ஓர் இனிய செய்தி

## 2024-2025 ஆம் கல்வியாண்டில் நமது வள்ளுவர் கல்லூரியில் சேரும் மாணவ மாணவியர்களுக்கு

## மூன்றாண்டுகளுக்கும் இலவசக் கல்வி!

- 500 திருக்குறள்களை ஒப்புவித்தால் ஒரு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1000 திருக்குறள்களை ஒப்புவித்தால் இரண்டு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1330 திருக்குறள்களை ஒப்புவித்தால் மூன்றாண்டும் கல்லூரிக் கட்டணம் இலவசம்.

### COURSES OFFERED

UNDER GRADUATE PROGRAMMES:

- B.A. English
- B.A. Tamil
- B.A. Public Administration
- BBA
- B.Com
- B.Com. (Computer Applications)
- B.Com. (Professional Accounting)
- BCA
- B.Sc. Computer Science
- B.Sc. Fashion Technology & Costume Designing
- B.Sc. Hotel Management & Catering Science
- B.Sc. Mathematics
- B.Sc. Physics

POST GRADUATE PROGRAMMES:

- M.A. English
- M.Com. (Computer Applications)
- M.Sc. Computer Science
- M.Sc. Mathematics

RESEARCH PROGRAMMES:

- M.Phil. Commerce
- Ph.D. Commerce

DIPLOMA COURSES:

- Diploma in Food Production
- Diploma in Banking & Finance

PROFESSIONAL PROGRAMME

- M.B.A




@ valluvarcollege @VCSM Events www.vcsm.ac.in 9944450507 / 9791726481 / 9791736481